ஸ்ரீ கணபதிதுணை.

பாண்டிநாட்டிற் சங்கபுரத்திலிருக்கிற

# உலகம்மைக்

# கலித்துறையந்தாதி.

நமசிவாயப்புலவர்

பாடியது.

திருத்தணிகைச்

சரவணப்பெருமாளையர்

முன்னிலையில்.

காஞ்சிபுரம், ஆறுமுகதேசிகர்குமாரர்

குமாரசுவாமிப்புலவரால்

பரிசோதிக்கப்பட்டு

இவராலும்,

சைதாபுரம் - ஐயாசாமிமுதலியார்குமாரர்

உமாபதிமுதலியாராலும்

சென்னபட்டணத்தில் - தி - விசாகப்பெருமாளையர்
கல்விவிளக்க வச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.

ஹேவிளம்பி ௵ ஆனி ௴ — இதன்விலை - அணா, ௪.



ஹர:

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# உலகம்மைக்கலித்துறையந்தாதி.

## காப்பு.

மூந்தாதிவேதப் பொருளாகுஞ் சிங்கை முதல்வியுல....*
கந்தாதி பாட வருள்செய்யு மேயெந்தை யார்சடைமேல் *
பிந்தாதி மாகர சந்திர ரேகை பிடித்திதழிச் .... ....*
செந்தாதி ஞாலோர் சிவப்பேற்றுந் தாழ்கைச் சிறுகளிறே.

உலகே பொதிய மலைப்பா ரிசநின் றுலாவுசுமங் ..........*
கலகே தயநடங் கண்டிருப்பாயிருக் காதிமறைப்..........*
பலகேள்வி யுண்மைப் பொருளேயுன் பாதம் பணிவனப்பால் *
விலகே னென்றினை விலக்கேன் வினையை விலக்குவையே...(க)

விலக்குந் தரமல்ல வேயைம் புலாறிக்கும் வேள்பகைக்கும்...*
இலக்குந் தமியனு மென்னெஞ்சு மோநெட் டிருல்வழிதேன்..*
கலக்கும் பொருளைத் துறைமுக் களாவையன் கைபுனைநித்.. *
திலக்குங் குமமுலை யாயிது வோவுன் றிருவுள்ளமே.......(உ)

உள்ளத் திறங்க ளுலகே யுனக்கிங் கொளிப்பதென்ன.........*
கள்ளத் திறங்களென் கன்மமன் றேநிட் களங்கமனப்...... *
பள்ளத் திறங்குமுன் னுற்பல தாராக்ரு பாநதிநீர்.... .... *
வெள்ளத் திறங்குவ தெந்நாள் சனன விடாய்கெடவே.......௩)

கெடுவா யெனையுங் கெடுப்பாய் மருண்டு கிலேசம்வந்தால்....*
படுவாயுன்னேடு படுபவ ரார்வினைப் பாசநெஞ்சே.........*
விடுவாயென் னம்மை யுலகா ளிடத்தின்பு வேண்டிலன்பு....*
நடுவா யவள்பத நாவாய் சனன நடுக்கடற்கே............(ச)

கடலுந் தரங்கமும் போலுல கேநிறை கன்மமும்பா.......*
மூடலுந் தொடர்ந்த வுறவென்சொல் கேனுறு கோடிதழி....*
மடலுங் குலைந்த மதுவூற்ற வெந்தை மதிச்சடைமேல்.......*
படலுஞ் சிவந்தபதம்பாடி யுன்னையும் பாடியுமே.......(ரு)

பாடுங் கவிக்கிரங் காயுல கேகொடும் பாவிக்குநீ...........*
கூடும் புசிப்பன்றிக் கூட்டுவை யோதன்னைக் கொண்டுதப்பி ..*
ஓடுந்தனையு முழைக்கிடுங் காலிவ் வுயிரகன்றால்...........*
வாடும் பிறகிந்த மண்ணோ டறுதியிம் மண்ணுடம்பே.....(சா)

மண்கொள்ளு மோவந்த விண்கொள்ளு மோவுன் மகிழ்நர்மனத்
தெண்கொள்ளு மோவிஃ தேதோ வதிசய மெண்ணியெண்ணிப்*
புண்கொள்ளு மோர்புன் மதியேனுங் காணவிப் போதிரண்டு *
கண்கொள்ளு மோவுல கேயின்று நீநின்றகட்டழகே.....(எ)

கட்டிய செம்பட்டு முத்தா ரமுநின் கணவனைப்போய்த்.......*
தெட்டிய கண்ணுந் திருத்தோடுந் தோளுந் தெளித்துநரூக் *
கொட்டிய மென்மலர்க் கூந்தலுஞ் சாந்தக் குழம்பலம்ப....*
முட்டிய கொங்கையு மாயுல கேவந்தென் முன்னிற்கவே..(அ)

நிற்கும் பிரண்ட மெல்லாந் தகர்த்துதிர்த் தூளிபடப்.......*
பொற்குன்ற மும்பொடி யாகநின் றாடும் புனிதர்தம்மை.....*
விற்குங் கடைக்க ணுலகேயுன் மாய விலாசவுண்மை.........*
கற்கும் பெரிய ரல்லாத்சிறி யேனெங்ஙன் காண்பதுவே...(கூ)

காணக் கிடைத்தது நின் திருக் கோலமென் கள்ளமனம்.......*
பூணக் கிடைத்ததுன் பொன்மலர்த் தாளுன்னைப் போற்றிசெய்து
பேணக் கிடைத்த துலகெனும் பேர்பெற்ற பேறுகண்டு....*
நாணக் கிடைத்ததொன் றம்யா வதையென்ன நான்சொல்வதே.

சொல்லப்படாதுல கம்மநின் பேரொழிற் றேற்றமப்பால்....*
செல்லப் படாது திகைத்துநின் றேன்பற்றிச்சிற் றுளியால்....*
கல்லப் ப்டாத கரும்பாறை நெஞ்சைக் கணாத்தினிமேல்......*
வெல்லப் படாதெழு மோகாந்த காரத்தை வெல்லுவையே. (௰௧)

வெல்வாயெ னம்மை யருளாற் புலன்களை வேங்கைகண்ட....*
புல்வா யெனவஞ்சும் புன்மைநெஞ் சேபிறை போலெயிற்று ..*
வல்வா யமன்வரு மோவுல கேயென்று வாய்திறந்து.......*
சொல்வாய் விழிக்கினுஞ் சோர்வா யிறக்கினுந் தும்மினுமே. ௰௨

தும்முங் கனன்முத் தலைச்சூல பாணிநெஞ் சுக்குள்வைத்துச்..*
செம்மும் புதையற் றிரவிய மாமுன் சிலம்படியை........*
விம்மும் புளக தனத்துல கேயென் பிடறுலைந்து ........*
கம்மும் படியித் தனைநாட் கதறியுங் கண்டிலனே...... (௰௩)

கண்டத்தி லேயன்று சற்றே கறுத்த கறுப்பனிலாத் ........*
துண்டத்தி லேசெஞ் சுடர்காட்டுபாதத் துணைதுணையா.....*
அண்டத்தி லேகண்ட தெல்லாமென் னம்மையடியர்தங்கள் ..*
பிண்டத்தி லேகண் டிருப்பார்கற் பாந்தரம் பின்னிடவே. (௰௪)

பின்னிட்ட கொந்தள பாரத்தின் மாலைப் பிரசமுண்டு......*
தென்னிட்ட வண்டின் சிறைக்காற் றுமூர்ச்சனை தீர்க்கவந்து ..*
முன்னிட்டு நின்றென் னுயிர்விடுங் காற்பத முந்தருவாய்....*
என்னிட்ட மிங்கி துலகே யுனக்கிட்ட மெப்படியே.....(௰௫)

எப்படி நீதுணை செய்குவை யோவறி யேன்பிழைத்த......*
தப்படி யேனிச் சனனத்திலேதள்ளத் தக்கதன்றால்.... ....*
அப்படி யேழு பிறப்பினுஞ் சூழுமல் லாற்பகட்டுக் .. ....*
கப்படி யூர்திக்கென் மேலெத் தினமுங் கடுந்தரவே.... (௰௬)

[ணோ
தரமேற்சென் றுண்டிப்பொருட்டாற் பிறர்வையத்தாழ்ந்துமண்
மரமோவிங் கெப்படிக் கேட்பதம் மாவிந்த வாழ்க்கையென்ன*
திரமோபுன் சன்ம மினிப்போது நீவைத் திருந்தநிக........*
பரமேவுன் பொற்பதந் தாவுல கேபடும் பாடறிந்தே.... (௰௭)

அறியாத தொன்றை யறிந்தனு பூதிவந் தானந்தமாய்ப்...... *
பிறியாது நின்ற ப்ரபஞ்சமெல் லாந்தள்ளிப் பின்னையொன்றுங்
குறியா திருந்தனைக் காணு விடிற்பிழைக் கும்படிக்கோர்..... *
நெறியா துங் கண்டதுண் டோவுல கேசொல்லு நீயெனக்கே.௰அ

எனக்கே சகாவுனை யன்றியுண் டோவென் றிருளெறிக்கும்.... *
கனக்கே சபாரக் கரும்பை நெஞ்சேயொருக் கானினைத்தால்.. *
தனக்கே சரீரம் பகுந்தானை வாழ்வித்த தாயெளிவந்........ *
தனக்கே சகாயம் புரிவாளோர் சிற்பத முன்பதமே....(௰௯)

பதமென்ற தாமரைப் பூவுக்கு ளாறு பதச்சுரும்பாய்...... *
இதமென்று போயிருந் தாயிலை யேமூடை யாக்கையைப்புற் .*
புதமென்று தாயுல கைப்பணி யாதென்ன புத்தியிதைச் .... *
சதமென்று நீகெடுத் தாய்மன மேயெனைச் சந்ததமே...(உ௰)

சந்தன பாரத் தனம்பிதி ரோடத் தமிழ்மறைச்சம்......... *
பந்தன வாவறப் பால்கொடுத் தாய்விருப் பாறிகள........ *
பெர்ந்தன மாமிச் சடஞ்சுடு காட்டுப் பெருநெருப்புக்...... *
இந்தன மாகத் தமியேனு நெஞ்சு மிருந்தனமே.........(உக)

தனத்தாசை யுண்டது நின்பூ சனையெண்ணிச் சற்சனங்க... *
ளினத்தாசை யுண்ட துனக்கன்பு வேண்டிரகசியவுற்....... *
பனத்தாசை யுண்டது சிற்பதங் காமித்த பாதகனேன் ...... *
மனத்தாசை யிவ்வள வம்மா வுலகுண்ட மாறங்கையே.. (உஉ)

தங்கங் குழைத்த முலைத்தாள மொற்றித் தனிக்குழையா.... *
னங்கங் குழைத்தவென் னம்மா சற்றேனு மகங்குழையாப்.. *
பங்கங் குழைத்த புனல்போற் கலங்கிப் பரந்துதிரிந்....... *
தெங்கெங் குழைத்து வளர்ப்பதென் சாண்குழி யிம்மட்டுமே.
[(உங)

மட்டுண்ட தென்றெண்ண வேண்டாம்பிறர் தலைவாயிலிற்போய்த்
தட்டுண் டலைந்து தடுமாறித் தீவினைச்சங்கலியால்........ *
கட்டுண்ட தென்னசொல் வேனுலகேயொருக் காலுமெய்த்தோர்க்
கிட்டுண்ட திங்கில்லை யேற்றுண்டு நான்பட்ட தின்னமுண்டே.

இன்னம் பராமுக மேனடியார்க்கு மெனக்கு மென்ன [(௨௪)
பின்னம் பராபரித் தாற்பிழை யோமனப் பேய்க்கிசையப் ※
பொன்னம் பராபரா நல்கு மென்றேசில புத்தியென்ன ※
முன்னம் பராபப் படித்த சங்கீத மொழிக்கரும்பே. (௨௫)
[பே

கரும்பே பொன்னுஞ்சொல் லுலகே யென் விண்ணப்பங் கள்ளரும்
அரும்போல்வ னென்சொன் மொழிவதன் றேகுறிப் பாலிக்கம் ※
வரும்போ திருந்த தும் வாராதெனவு மதிமருண்டேன் ※
இரும்போ விரும்பல்ல வோவடி யேனுள் ளிலதயத் தையே. ௨௬

இதயத் தெறித்த விருண்மாற்றி நின்னரு ளின்றிரவி ※
யுதையத் தெறித்த வெயிலொக்கு மே நின்று சூழறுகால் ※
புதையத் தெறித்த மதுக்கொன்றை யார்தம் புரிசடைக்கா ※
டதையத் தெறித்த பதத்தா லலைக்கு மரும்பிடியே. (௨௭)

பிடிபட்ட தன்றன் சொருபத்தி யானம் பிறந்துபிறர் ※
தடிபட்ட சன்மமென் னாட்படுமோநின் றதிர்படுமவ் ※
விடிபட்ட வெவ்வர வென்னொடொர்ந் தேனுலகே யெனக்கிப் ※
படிபட்ட துன்பமினிப் போது நீமுகம் பார்த்தருளே. (௨௮)

அருளுக்குந் தென்மலைச் சந்தனச்சார லகண்டிதசிற் ※
பொருளுக்குச் சிங்கபுரத் துலகாளுக்குப் பூங்குழலின் ※
சுருளுக்குப் பைம்புயலேற்கநின் றாளுக்குந் தொண்டுபட்டும் ※
இருளுக்குச் சிந்தையிலைப்படு மேலுண்மை யென்படுமே. (௨௯)

படுக்கின்ற கண்ணியிற் பட்டுடுபட்ட பறவையைப்போல் ※
இடுக்கின்ற சன்மத் திடைப்பட்டுவிணி விகபரமும் ※
கெடுக்கின்ற கன்மங் கெடுப்பதென் றோவென்பர் கேட்டதெல்லாம்
கொடுக்கின்ற கற்பகக் கொம்பேயசல குலவல்லியே. (௩௰)

குலவல்லி மேன குமாரத்தி சூரற் குறருளே நித் ※
திலவல்லி கூட்டச் செங்காந்த ளேர்ந்துலம் பந்தேங்கமழுற் ※
பலவல்லி தாமரைப் பூவல்லி மெல்லப் படக்கன்றுதாள் ※
நிலவல்லிகூட் டமல்யா சலப்பக்க மின்றபொன்னே. (௩௧)

பொன்னாசையுமடப் பூவைப ராசையும் போலநிலத்... *
தின்னாசையுமெனக் கின்னாசெயு மிதற் கேதுசெய்வேன் .... *
உன்னாசை மேற்கொண்டுவாழ்முக்களாவன யோகியென்போன்
றன்னாசை நோய்க்கு மருந்தே கல்யாண சவுந்தரியே ... (௫௨)

தரியே னுன்பேரன்றி மற்றவர் பேரையுன்சன்னிதியைப் ... *
பிரியே னினியிந்தப் பேயேன்பிறவி பிறந்திறந்து ........ *
திரியேன் வறுமைக் கென்செய்வேன் றவர்பின்பு சென்றுபரி *
கரியே னுலகம்ம யேறென்ன வேண்டக் கடவதுவே .... (௫௩)

கடவுந் தடுநடைக் கார்மேதி யூர்திதன் கையிலகப் ......... *
படவுங்கெடவுங் கடப்படு மோவின் பகீரதிபோய்த் ...... *
தடவும் பவளச் சடையா னலர்ந்தசெந் தாமரைக்கை ...... *
தொடவுஞ் சிவந்த பதத்துலகாளைத் துதிசெய்துமே ... (௫௪)

துதிசெயுந் தொண்ட னெனக்கேமுழுதுந் துணைச்செய்துமெல்
விதிசெயுஞ் செய்கை வெறுஞ்செய்கை யாய்விட வேறுசெய்த *
கதிசெயுந் தன்பதங் காட்டுங்கொலோதரங் கப்பொருனை ... *
நதிசெயுங் கம்பலை நீங்காத சன்னிதி நன்னுதலே ...... (௫௫)

நுதலைக் கிழித்தப் புறப்பட்ட தீக்கொலை நோக்கின்முழு ... *
முதலைத் தமிழ்ச்சிங்கை முக்களவீசனை மோகஞ்செய்யும் ... *
நிதலைக் குரும்பைக் கரும்பேயுன் பல்லவச் சில்லரிப்பூங் .... *
குதலைச் சதங்கைப் பதங்களுக் காட்பட்டுக் கொண்டனனே(௫௬)

கொண்டே னுளத்துலகம்மநின் னூபுரக் கோகனகம் ....... *
கண்டேனொருவருங் காணாத காட்சியைக்கற்பகப்பூந் ....... *
தண்டேனுகர்ந்து களிதூங்கு மோர்சஞ் சரிகமென்ன ....... *
உண்டே னிருந்தரு ளானந்த மாமமிர் தோதகமே ..... (௫௭)

ஓதனமான விடத்தா ரெழுத்திட்ட வொப்பவிலைச் ......... *
சாதனவோலையந் தாழ்குழை யாள்பதந் தன்னைநெஞ்சே ... *
மாதனமாக மதித்தன மோகெடு வாய்மருண்ட ......... *
சேதனமாக விருந்தோம் பிறந்தென்னசெய்தனமே ... (௫௮)

செய்தவம் போதன் முதலோ ரிறுவென்று தெய்வமலர்ப் .. *
பெய்தவம் போருகப் பெண்பெரு மாளெம் பிராட்டியையென்
கைதவம் போத வுலகேயென் றேத்திலன் காலனினி .. .... *
வைதவம்போத விழைத்தாய் பிழைத்தென்று வாதிக்குமே.(௩௯

வாதித்திலைத்த வினைமாற்றி வாயுவை மட்டிருத்திச்........ *
சாதித்தசித்தி தரும்யோகசாதனை தன்னி லொன்றிப்...... *
பேதித்த தத்துவ மெல்லாங் குளானந்தப் பேரமுதால் ... *
சோதித் தவர்க்கென் னுலகாளருள்வந்து தோற்றிடுமே..(௪௰)

தோற்றேன் வினைப்பகை யைம்புலவேளிருஞ் சூழ்ந்துமனந் ..*
தேற்றே னறிவைச்சிறைப் படுத்தார்பசுந் தீங்குதலைக்......*
கோற்றேன் மொழியுல கம்மாசும்மாவவர் கோட்டிகொள்ள..*
ஆற்றே னினிச்செய லற்றே னுனக்கின் றடைக்கலமே... (௪௧)

கலசந் திருமுனிக் காமணக் கோலமுங் காட்டிமந்தா.......*
னிலசந் தனகிரிச் சாரனின் றுளைமுன் னீதிமறைக்........*
குலசந் ததிக்குணப் பால்கொடுத் தாளையுட் கொண்டிருந்தும் *
சலசந் திரசஞ் சலப்படுநெஞ்சைத் தடுப்பதென்றே ....(௪௨)

என்றைக்கு நீதுணை யம்மாவென் றாவி யிறந்துவிடும்.........*
அன்றைக்கு மோடிவந் தஞ்சலென் பாய்நச் சராவணையான்.. *
மின்றைக்கு மாலையங் கோடீர காந்தி விளங்குபொலங் ....*
கொன்றைக்கு மேற்றிய பொற்றாட் சிமையக் குலக்கொழுந்தே.

கொழுந்து நிலவும் பிறைமண நாறுங் குழகன்முடிக்..........*
கழுந்து வரிவிற் கனகா சலத்துன் கணவனொடும்.......... *
எழுந்து விடையிற் புறப்படு வாயுல கேயினிப்போய்.....*
விழுந்து நிரயத் தழுந்தா தென்றாவி விடும்பொழுதே..(௪௪)

பொழுது கழிந்தது வீணேயெனக்கென்ன புத்தியுன்னைத்....*
தொழுது பணிந்து துதித்தில னேயிதைச் சொல்லிச்சொல்லி *
அழுது புலம்பில் விடுமோ யமனினி யாயினுமென் .........*
பழுது களைந்து புரப்பா யுலகம் படைப்பவளே.........(௪௫)

படைப்பா ரொருவ ரளிப்பா ரொருவரப் பாலொருவர்....*
துடைப்பார் பிறகு தொழில்வே றிரண்டு தொகுத்துவகுத்..*
தடைப்பா ரிருவ ரொனத்திரி வாருல கம்மைசற்றுன்.........*
கடைப்பார்வை செய்கின்ற தொன்றுலந்தாதிக் கக்காரருமே. சசு

காறுந் துவர்க்கும் புளிக்குங்கைப் பாமென் கவிமுறைப்பா..*
டேறுந் திருச்செவிக் கேறுதென் றுவு மெளியனுன்பேர்....*
கூறுந் தொழில்விட்டு மற்றோர் தவஞ்செய்து கொண்டுநின்னைத்
தேறும் படிக்குல கம்மாவென் பாழ்மனஞ் செவ்வல்லவே. (சஎ)

செவ்விக் கலையின் மதியே மதியெனத் தீமையராக்........*
கௌவிக் கிடந்ததுங் கண்டிரங் காயெந்தை கண்ணுதலான்..*
நௌவிக் கருங்க ணுலகேபொன் னுசையி னுற்பிறனா......*
வெளவித் திரித்தன விப்படி யோவென்னை வாழ்விப்பதே. (சஅ

வாழ்வித்த தொன்றிலை யிந்நாள் வணாயும் வறுமையினுல்....*
தாழ்வித்த தீங்கொரு சற்றல வேயித் தனையுநிற்க...[டேனீ *
வீழ்வித்த தென்னை யடுங்கொடு நோய்க்குள்வெவ் வேறுகெட்
ஊழ்வித் தகமென்ன சொல்வே னுனக்கென் னுலகம்மனே. சகூ

அம்மனை பந்து கழங்காய்க் குலாசல மத்தனையும்........*
எம்மனை யங்கை யெடுத்தாடு நாளுல கின்றெடுத்த........*
செம்மனை நுண்மருங் கிந்திரா கேள்வனத் தேவரெல்லாம்..*
தம்மனையென்று புகுவாரி வண்மலர்த் தாளிணைக்கே....(ருய)

தாளென்ற கிண்கிணிப் பங்கயப் பூவைத் தலையின்முடித்.... *
தாளென்று சொன்ன தனேக்குமுண்டே யுன்னை யாதரித்தும்..*
கோளென்ற வல்வினை தீரா விடிலைய கோபிழைக்கும்.... *
நாளென்று மங்கல கல்யாணசுந்தர நாயகியே..........(ருக)

நாயக மண்டல முக்கோணத் தேயுன்னை நாடுமிந்த..........*
பேயக மண்டர்தம் பேறெண்ணு மோபெரும் பேருவரி....*
போயக மண்டமுன் காவிரி யீந்தருள் புங்கவன்கைத்.......*
தூய கமண்டல நன்னீர்ப் பொருனைத் துறையன்னமே. (ருஉ)

அன்னம் பழகும் பிடிநடை யாளுல கம்மைசெம்மை ......※
கன்னம் பழகுங் கயற்பார்வை வெள்ளக் கருணைக்குளே ....※
முன்னம் பழகும் பழவடியாரை முழுது நம்பி...........※
இன்னம் பழகும் பழகுமொன்றாய் நின்ற வின்பங்களே. (௫௩)

இன்பந் தருநல் வினையில்லை யோவெளி யேற்குளது ......※
துன்பந் தருங்கொடுந் தொல்வினையோ வெந்தை சோகங்கண்டு
முன்பந் தராதுந் துமி பொங்கி மாகல முன்றிலிட்ட........※
நன்புந் தரினின்று சற்றே கவிழ்ந்து நகைத்தபெண்ணே. (௫௪)

பெண்மைத் திருவுருப் பெம்மா னுடம்பிற் பிறர்க்குணர்த்தும்※
உண்மைப் பொருளை யுலகுடை யாளை யுணர்ந்திலையே ....※
கண்மைக் குவளை யமிர்தப்ரவாகக் கருணைகண்டும் ........※
வண்மைக் கடலும் வறுமைக்கு ளாய்நின்ற வன்னெஞ்சமே. (௫௫)

நெஞ்சக் குளேயெங்ஙன் வைப்பே னுன்பாத நினைந்துபுலன் ※
அஞ்சுக்குளே யொன்றுங் காணு லுமில்லை யறிவுகெட்டேன் ..※
நஞ்சுக்குளே நல்லதுண்டோ வெண்டோ ளெந்தை நாணிலவு ※
பிஞ்சுக்குளே சிவப்பூட்டிய தாட்டுணைப் பெண்கொடியே.(௫௬)

கொடியேன்மனமுங் குழையேனுன்பேர்சொல்லிக் கூப்பிட்டுன்
படியேனினியெப்படிபிழைப்பேன்யமன்பாசம்விட்டால் [சீர்ப்
அடியேன் விடுவிடென் றப்போ தடிக்கு மடிவிலக்கி.....※
பிடியேனை யம்மவுலகே யெவ்வாறு விடுவிப்பையே....(௫௭)

விடுபோந்தவ னென்னடியா னென்றோடி விலக்குவையோ ..※
கொடுபோய் நரகிற் குளிப்பாட்டு போவென்று கூறுவையோ※
அடுபோரயின் முத்தலை வேனமன்செயு மாக்கினைக்குட் ....※
படுபோதினென் சொல்லுவா யுலகேயுன் பராக்கொழிந்தே.௫௮

ஒழிவாய்த்தவம் விட்டிலையாசொன் னம்மை யுலநடியார்.....※
விழிவாய்ப் படுஞ்செவி வெவ்வா யராவெள்ளி வெற்பறுபட்..※
டழிவாய்ப் பகிரண்டத் தாயிரகோடி யடுக்குமுந்நீர்க் ..※
குழிவாய்ப்புனலிற் குலைவாய்க் கிடந்து குழம்பினுமே.. (௫௯

குழக்கன் றுலவை மலைப்பாரி சத்திற் குடியிருக்கும்........*
பழக்கன் றிருவுருப் பாதிசெய்தா யிந்தப் பாவிகண்ணீர் .. *
உழக்கன் றரியன்றெரு கோட்டை யுண்டுகண் ணோட்டைபட*
அழக்கன்றிய றுன்பந்தீராய்கொ லுன்னடி யார்க்கன்றியே.

அன்றிற்பெயர்க்குன் றெறிந்தோனைப் பெற்ற வென்னம்மைதமி
குன்றிற் பிறந்த குழந்தைமந்தா நிலங் கொம்பனையார் .. [ழ்க்
முன்றிற் புறந்தவழ் சிங்கைக்கங் காதர மூர்த்தியிடம்......*
ஒன்றிற் சிறந்தது வேகுடி யாய்வந் துறைந்தனவே .... (௬௧)

உறைக்குங் கனன்முத் தலைவேல் வலந்திரித் தாழிநிற்கும்...*
இறைக்குந் தெளிதற் கெளியதன் றேயுலகீன்ற வன்னை......*
நிறைக்கும் புவனந் திரோதாயி மாயையி னின்றழுந்த....—*
மறைக்குந் திரும்பு வெளியாக்கு மித்த மகத்துவமே....(௬௨)

மகமுந் தவமும் பயின்மலை யாசல வாணனெங்கோன்......*
அகமும் புறமு மமர்ந்திருப் பாய்பொரு ளார்ச்சிதமும்....*
சுகமும் பெறுகிலன் பொய்வாழ் விதென்று துறந்துமுய்யேன்*
இகமும் பரமுமிழ்ந்தே னெனக்கெ னினிப் பிழைப்பே. (௬௩)

பிழைத்தே னிதுவரைபொய்யோடுமெய்யும்பிதற்றி யொன்றே
இழைத்தேன் வினைமட் டிலக்கில்லை யேயெளி யேனரகத்...*
தழைத்தேன் விடிவதுண் டோநின் கருணையுண் டாகிலுண்டாம்
மழைத்தேனளகத் துலகே பிடிப்பிது மாத்திரமே.... (௬௪)

சிரம்போ லுடலை நினைந்திளை தேடித் திரிந்துநச்சு........*
மரம்போ னெடுக வளர்ந்திருப்பார் புன் மனையிலொரு ....*
தரம்போ லிரண்டு தரநடந் தால்வைது தள்ளுவரொன்......*
றரம்போலென் னெஞ்சை யுலகே கவலை யறுக்கின்றதே. (௬௫)

அறுத்துப் பொருப்பைப் பிளந்தோர் பொருளை யருவிபைங்
கிறுத்துப் புறப்பட் டிறங்குதண் சார லிடத்துநின்று *[கோங்*
பொறுத்துச் சிவந்தநின் பொற்றுட் கடிமை புகுந்ததம்மே..*
மறுத்துப் பிறப்பில்லை யென்றுநன்று யென்மனத் தெண்ணியே.

எண்ணத்தி லேயுண்மை யெண்ணாமல் வேத மெடுத்துச்சொன்ன
வண்ணத்திலேயென்மனம்வைத்திலேன்கொங்கைவள்ளத்துப்பா
கிண்ணத்திலே சைவக் கன்றுக்கு வார்த்தவள் கீர்த்தியெல்லாம்[ல்
அண்ணத்தி லேநின் றமுதூறப் பாடிக்கொண் டாடிலனே. (௬௭)

ஆடிச் சிவந்த பதத்தார் பவளச்ச டாடவிபட் ..............*
டோடிச் சிவந்த சரோருகத் தாளென் னுலகுவைத்தாள்....*
சூடிச் சிவந்த தலையுமெக் காலமுந் தோத்திரங்கள்.........*
பாடிச் சிவந்த கவிநாவும் பெற்றதென் பாக்கியமே.... (௬௮)

பாக்கிய மாவ துலகேயுன் பங்கய பாதமெனும்.......... *
யோக்கிய வானென வோங்கிய வாழ்வென் றொருபிடியாய்....*
வாக்கிய வேத வழிநட வாமன் மயங்கிமலந்...............*
தேக்கிய தீவினைக் குள்ளே மனஞ்செம்பியூ சிக்கியதே...(௬௯)

சிக்கென்ற கொங்கை யுலகேமெல் லென்று சிவந்தபதத்....*
தூக்கென்று வந்து தொழும்புசெய் வெனறந் தோற்றவெறும்*
பொக்கென்ற வாவிப் புலான்மீனுக் கேரிப் புனன்மடைவாய்க்*
கொக்கென்று நின்று குறிக்கின்ற தாற்றல்வெங் கூற்றமொன்றே.

ஒன்று மலச்சட மொன்பது மூறலவ் வொன்பதினு ........*
நின்று மலச்செடி நாறுமெந் நேரமு நீர்விட்டனறைக்.......*
கன்று துடைப்பினுந் தீராது பாழ்த்த வருவருப்பி.........*
தென்று தவிழ்ப்ப துலகே நரக மிதினுநன்றே........ (௭௧)

நன்றாய் முடிந்த தடியேன் சரித்திர நான்செய்பிழை.. ....*
ஒன்றா யிரம்பதி னாயிர மாயொரு மிக்கவொரு ...........*
குன்றாய் முடிந்தது சொல்லோ விரந்து குடியென்றுபோய்*
நின்றா யொதுங்க வுலகே பொதியி னிழலுக்குளே....(௭௨)

நிழலுங் குளிர்ச்சியு நீங்காப் பொருனே நெடுந்துறையாள்..*
அழலும் பசித்தழ லாற்றுமென் னுதவை யாதரித்திங் ......*
குழலுங் கருத்து மிழைநாலைப் பாவிழைக் கூடுபெய்யுங்....*
குழலின் பயிற்சியு மொன்றுநன் றாமென குண்கதியே. (௭௩)

கதிகாட்டி யென்னைப் புரப்பாள் கருணையுங் காட்டிநல்ல....*
மதிகாட்டி யுண்மை வழிகாட்டித் தன்மண வாளருக்குச்....*
சதிகாட்டி யொக்கநின் றாட்டுவித் தாளித் தனையுலக......*
விதிகாட் டிலவித் திதைக்காட்டிப் பேதினி வேறில்லையே. (எசு)

இல்லது முள்ளது நீயறி வாயுல கேவினைதான்.........*
வல்லது செய்யினு மற்றது நீயுன் மனம்பொறுத்து........*
நல்லது செய்வ தனக்கே புகழ்தொண்ட னுன்சித்தம்...*
அல்லது பின்னை யடியே னுரைத்தென்ன வாவதுவே....(எரு)

ஆவது மோர்பொரு ளாகா ததுமுல கம்மைமண்மேல்..   ...*
சாவது மாறிச் சனிப்பது மூருஞ் சகடமென்னப்..........*
போவது மீள்வது மெல்லாமுன் சித்திரம் புன்மையன்றே..*
நோவது மேழை யுகப்பது ம் வேறு நுவல்வதுமே....(எசு)

வதுவைத் திருமுன்றிற் பநதரின் ஜேம்மி வைத்ததன்மேல் ..*
விதுவைப்புனைதொங்கல்வேணியின்மேல்வைத்தமென்மலர்த்தா
ளதுவைப்பெனவெண்ணமாட்டாமற்போய்க்கழுகாதியுண்ணும்
பொதுவைப் பொருளென் றுலகே யிரையிடப் போறறுவனே.

போற்றும் வணங்கு முலகாளைத்தென்னம் பொருப்பொருபால்
நாற்று நிரம்பி நடைகாவும் பாய்ந்து நறுங்கனிசா.......*
ற்ற்று வளங்கெழு தெம்மாக் களாநிழ லுட்பொருனை......*
யாற்று நெடுந்துறை மேலிருப் பாள்செம்பொ னாலயத்தே.எஅ

ஆலயம் போதென் றிருந்தார் வணங்குல கம்மையைநான்...*
காலயம் போதும் பகற்பொழுதும் பானுக் கதிரழுங்கு.......*
மாலயம் பொதுந் தொழுவே னெனக்கிது மாத்திரமே...*
வேலயம் போதனுக் கென்பொருட் டாலில்லை வேலையுமே. எஅ

வேலை யெடுத்துப் பொருப்பெறிந் தோனம்மை மென்கமலக்*
காலை யெடுத்தக் கருத்துள் வைத்தேனில்லை கல்வியின்சொன் *
மாலை யெடுத்துப் புனையேனென் சொல்வதம் மாவவதி....*
யோலை யெடுத்துப் புறப்படுங் கூற்றுக் குணாயெடுத்தே.(அ௦)

[illegible]டுத்தபிறப்பிற் கதிபெறவேண்டி லெறிதிரைநீர் ..........*
மடுத்தமுனிக்கு மணக்கோலங் காட்டி மலையமலைக் .......*
கடுத்ததலத்தி லிருந்தாளெனம்மை யவளைவெம்மை........*
கொடுத்தபசிக்குயிர் வெம்பிடுவீர்சென்று கும்பிடுமே. (௮௧)

கும்பத்தில் வந்தவன் போற்றுலகாள்பொற் குழைதடிந்து..*
விம்பத்தி னின்று விளையாடுங் கண்கள் விடக்குமாக் ........*
கம்பத் திருந்து வணங்காத பாவியைக் காத்துநல்ல .......*
சம்பத்து நல்கி யொழிப்ப தென்றோமனத் தாபத்தையே(௮௨)

தாபிக்குஞ் செய்கை தருமுயிர் காக்குந் தகைமைநல்கும். ..*
கோபிக்குந் தன்மை கொடுப்பிக்கு மூதண்ட கோடியெல்லாம்
நாபிக்குள் வந்தவன் முன்னோக் கொண்டு நடப்பிக்கும்வாள்
சோபிக்குங் கண்கொண் டுலகாளென பாசந் துடைப்பிக்குமே

துடைத்தா யிலைவன் கவிநோயை யென்னைத் தொழும்புசெய்யப்
படைத்தா யிலைவந்து பார்த்தா யிலையுள பள்ளத்தில்விட் .... *
டடைத்தா யிலையுன் கருணைப்ர வாகத்தை யையவரைவிட் .... *
டுடைத்தா யுலகம்ம நன்று மினியென் னுயிர்ப்பயிரே.—(௮௪)

பயிரிட்டு வேலி யிரிப்பவர் போலிந்தப் பாழ்ம்பிறவிக் ....*
குயிரிட்டு வாழ்வொளித் தாயுல கேபக டேர்தியென்னைத் ....*
தயிரிட்ட காம்பிடை மத்தினைப் போல்லைத் தான்மறிப்பேன் *
அயிரிட்டவேலை யுலகீன்ற நின்றிரு வாணையிட்டே. .... (௮௫)

இட்டம் பிறிதிங் கிலையுலகே யெனக் கிந்திரனூர் ........—*
பட்டம் பெறுவது பாரமன் றேதம் பதவியிலே........—*
நட்டம் புயனையு மாற்றி விப்பாரன் னவரிட்டதே........*
சட்டம் பலவுண் டுனைப்போற்றப் பெற்றவர் தாட்டிகமே(௮௬)

தாட்டா மரைதந் தருளுலகே பட்ட சஞ்சலங்கள்........—*
கேட்டா ருருகுவர் கெட்டே னினியென் கிலேசமெல்லாம்— *
பாட்டா லுரைசெயிற் பட்டோலை கோடிபற் றாதையோ.. *
மோட்டா யிரம்வரி தீட்ட வல்லார்சற் றெழுதுவரோ.... (௮௭)

எழுதும் படியு முருவேற்றும் போற்று மினச்சுரும்பர்.....*
கொழுதும் பரிமளக் கொந்தள நீளக் குயிலுலகாள்........*
முழுதுங் கருணை புரிவாள் சன்னமு மோசனமாம்..........*
பழுதுந் தவிருங் கெடுவீ ரெழுத்தோர் பதினஞ்சுமே.—(௮௮)

அஞ்சித் திரிந்து பெரியோரைக் காணி லயர்ந்து கெட்டேன்—*
கஞ்சிக் கலைந்து கவலைப்பட்டேன் சதங் கைத்திருத்தாட்.... *
பஞ்சிக் கிணங்கு மழியாக் கருணை பழுத்தவப.........*
ரஞ்சிப் பசும்பொ னருட்பாவ நாசத் திருக்கவுமே....(௮௯)

இருக்குந் தலமிலை யோமுக்க ளாநிழ லெந்தையெல்லாம்.... *
முருக்குங் கடவுண் முழுத்தீ யுடம்பையுண் மோகத்தினால் ...*
உருக்கும் படியங் கிருந்தாய் பொறுத்தது வோவிறுக்ப் — *
பருக்குங் குவிமுலை யாயுல கீன்றவுன் பச்சுடம்பே .... (௯௰)

பச்சைப்படிவத் துலகே யிரண்டு படியுனக்குப்........— *
பிச்சைப் படிநெல்லுப் பெம்மா னளப்பது பேருலகம் .... *
இச்சைப் படிக்குண்ண வென்றே வெனக்கிலை யென்னிலிந்தக்*
கொச்சைப் படிறன் பொருட்டா லளக்குங் குறைப்படியே.௯௧.

படிக்குங் கவியின் பயனாகச் சொல்விற் படுத்துவினை.... —*
முடிக்கும் படியென் முயற்சி கொண்டோ வண்டு மூச்செறிய *
வெடிக்குந் தொடைமைக் குழலுலகே யென்று ம்வேதமெல்லாம்*
வடிக்கும் பெயனா யென்னாத் தழும்பெற வழுத்துவனே. (௯௨)

வழுத்த நினைக்கிலன் மாதுலகாளை யென்மண்டைமதி........*
யெழுத்தை வெறுப்பதினியே துகண்ட தெல்லாம் புசித்துக்—*
கொழுத்த விடக்குட லால்வந்த பாவமொர் கோடியென்னை . க்
கழுத்தை முறிக்குஞ் சுமைப்பார மெத்தக் கனக்கின்றதே.(௯௩)

கனமுண்ட கூந்தலுலகே யுன்சன்னிதி காத்திருக்க ........*
மனமுண்டு பாழ்த்த வறுமை யொட்டாது வலியச்செய்யும்..*
இனமுண்டு நீகொடுபோய் நெடுந்தூர மிவனை யங்கே....— *
தனமுண்டு காணென்றது கெட்டதுவுந் தடையுண்டதே. (௯௪)

உண்டார் கடல்விடந் தன்மணவாளரன் றுண்கையிலே......*
கண்டா ளுலகம்மை கண்டத்திலேமலர்க் கையைவைத்துக்....*
கொண்டாள் பிறகங் கமுதான தென்பது கொண்டிவட்கு....*
விண்டாலென் புன்கவி நன்கவி யாமென்று விண்டனனே. (௯௫)

விண்டல நின்ற சரற்கால சந்த்ரசு வேதமுக..............*
மண்டல முங்கைம் மலரொடுந் தொளில் வழிந்தரத்ந........*
குண்டல மும்பொலி வாலப் பிராய குமாரத்தியாய்ச்........*
செண்டலர் செங்கை யுலகாளென் னுவிற்சிறந்தனளே... (௯௬)

சிறப்பார் சிறப்பி னுலகா ளடியவர் சிந்தைக்கென்னும்......*
பிறப்பார் பிறப்பும் பெறுவார் தவமுமப் பேறுதப்பி.....*
இறப்பா ரிறப்பு மிறவாமை வேண்டுமென் றில்லறத்தைத்....*
துறப்பார் துறப்பு நகைக்கிட மானவித் தொண்டனுக்கே. (௯௭)

தொண்டைக் கனிவிள்ள வள்ளுகிர் வீணைதழாவ நெடுங்....*
கொண்டைச் சொருக்குப் புறந்தாழ வோலைக் குழைதடவும் *
சண்டைக் கயலுஞ் சிவப்பேற மாதங்கி சாமளையாம்........*
பண்டைப் படிவத் துலகா ளருள்வந்து பாலிக்குமே.... (௯௮)

பாலான வேலையிற் சிந்தாமணிமண்ட பத்தின் மறை........*
நாலான பீடத்தை ஞானுந்த மாயருண் ஞாயிறுபோல் ....*
மாலான தேவர்கள் காலான மஞ்சத்து வந்திருக்கும்........*
மேலான வாழ்வையுங் கண்டேன் பொருனைக்கு மேல்புறத்தே.

மேலைக் கடவுளிடப் பாகமுந் துள்ளு வெள்ளருவி .......*
மாலைப் பொதிய வரைச்சார லுநின்ற வண்ணமுந் தாட்........*
காலைக் கமலமுங் கல்யாண விக்ரக காந்தியும் பொன்........*
னோலைக் குழையுங் குழற்காடும் வாழி யுலகம்மையே...... (௱)

உலகம்மைக்கலித்துறையந்தாதிமுற்றுப்பெற்றது.

